# 'மூலிகை மணி'

[தமிழ் மருத்துவத் திங்கள் இதழ்]

ஆசிரியரும் வெளியிடுபவரும்

தினமணி புகழ்

வேலூர் மருத்துவர் ஆ. இரா. கண்ணப்பர், R.M.P.

ஆண்டு சந்தா ரூ. 6-00 தனி இதழ் 0-50 பைசா


ஐப்பசி இதழில்

(சிறப்புக் கட்டுரைகள்)




மூலிகைமணி சந்தா விபரம்

கார்த்திகை மீ முதல்

| உள் நாடு | மலேஷியா, சிங்கைக்கு |
|---|---|
| 1 ஆண்டு 9-00 | கப்பல் வழி 16-20 விமான மூலம் 23-40 |
| 3 ஆண்டு 27-00 | கப்பல் வழி 48-60 விமான மூலம் 70-20 |
| ஆயுள் சந்தா ரூ. 200 | ஆயுள் சந்தா ரூ 220 (கப்பல் மூலம்) |



தலைமை அலுவலகம் : மூலிகை மணி வேலூர் - 632001

சென்னை அலுவலக முகவரி : மூலிகை மணி, 7, அருளாம்பாள் தெரு, தி. நகர். சென்னை - 600 017.

தொலை பேசி : 445689 (சென்னை)

உ

# குறை தீர்க்க வாராயோ

பல்லவி

சோதனை ஏனோ வேல்முருகா—உன்மலர்
பாதத்தை வணங்கினேன் மால்மருகா (சோதனை)

அநுபல்லவி

தீதொன்றும் செய்திலேன் வையமதில்—உனையன்றி
யாதொன்றும் நினைத்திலேன் ஐயமில்லை
(சோதனை)

சரணம்

நாளெல்லாம் உன்னருள் வேண்டுகின்றேன்
நாவினில் உன்புகழ் பாடுகின்றேன்
கேளாயோ என்குரலை குருநாதா—எந்தன்
குறை தீர்க்க வாராயோ அருள் தாராயோ
(சோதனை)

மன்னை தி: நீலகண்டன்.

# மூலிகைமணி வாசகர்கட்கு மட்டும்

வேலூர் டாக்டர்

## A. R. கண்ணப்பர் அவர்களின்

அரிய மூலிகை தயாரிப்புகள்

| | | |
|---|---|---|
| 1. | மூலிகை காய கல்பம் செட் 1 மண்டலம் | 140 00 |
| 2. | மகா மூலிகை எண்ணெய் செட் | 30 00 |
| 3. | முசுமுசுக்கை தைலம் 2 oz | 5 00 |
| 4. | வல்லாரைத் தைலம் 2 oz | 5 00 |
| 5. | பொன்னாங்கண்ணி தைலம் 2 oz | 5 00 |
| 6. | முக்கூட்டு கற்ப மூலிகை தைலம் 2 oz | 5 00 |
| 7. | நேத்திரப் பூண்டு தைலம் (கண் ஒளி பெற) | 20 00 |

பார்சல் செலவு 4-00 சேர்த்து மருந்து விலையுடன் M.O. அனுப்பினால் பதிவு பார்சலில் மூலம் அனுப்பப்படும். நாள்பட்ட நோயாளிகள் நேரில் வந்தால் கைநாடிப் பார்த்து ஆலோசனையும் மூலிகை மருந்து தேர்வு செய்து தரலாம். V.P.P. கிடையாது.

(பொது விற்பனைக்குக் கிடையாது.)

முகவரி :

டாக்டர் A. R. கண்ணப்பர், R.M.P.

7, அருளாம்பாள் தெரு, தியாகராய நகர், சென்னை - 17.

போன் : 445689

---

# நேரில் வரும் அன்பர்கட்கு

மூலிகைமணி ஆசிரியர்

அவர்களிடம் நேரில் வந்து ஆலோசனை

பெறவிரும்பும் அன்பர்கட்கு

சென்னையில் அனைத்து நாட்களிலும் சந்தித்து மருத்துவ ஆலோசனையும் சிகிச்சையும் பெறலாம் காலை 9 மணி முதல் 12 மணி வரை பகல் 3 மணி முதல் 5 மணி வரை ஆலோசனைக் கட்டணம் உண்டு.

ஆஸ்துமா, குன்மம், மேக நோய்கள், மூலம் கண்நோய்கள போன்றவைகளுக்கு குறிப்பிடத்தக்க வகையில் மூலிகை சிகிச்சை அளிக்கப்படும்.

மருத்துவர் : ஆ. இரா. கண்ணப்பர், R.M.P

7, அருளாம்பாள் தெரு, *தி. நகர்*

சென்னை-17—தொலைபேசி : 445689.

உ

முருகா

ஐந்துகரத்தினை யானை முகத்தனை இந்தினிளம்பிறை போலுமெயிற்றினை
தந்திமகந்தனை ஞானகொழுந்தனை புந்தியில்வைத்தடி போற்றுகின்றேனே




எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே. —(தாயுமானவர்)


மலர் 12 ] நள ஹூ ஐப்பசி மீ அக்டோபர்-76 [ இதழ் 12


# கலியுக அகத்தியருக்கு பவழ விழா

மதிப்புக்குரியவரும் வணக்கத்துக்குரியவருமான நமது தமிழ் நாட்டின் வள்ளலார் வழி வந்த எனது குருநாதர் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள் அவர்களுக்கு பவழ விழா நடந்தேறியது. கடந்த மாதம் முதலே கோயம்புத்தூர், சென்னை, ஸ்கந்தர் சஷ்டி ஹாலிலே வேலூரிலேயே பவழ விழா கோலாகலமாக நடைப்பெற்றது. இதுவரையில் தமிழ் பெரியார்களுக்கு நடந்திராத அளவு இந்த விழா அமைந்து விட்டதில் வியப்பில்லை!

காரணம் என்னவென்றால் இந்த விஞ்ஞான யுகத்தில் தமிழையும் தமிழ் தெய்வமான முருக கடவுளின் சக்தியையும் எளிதான முறையில் படிப்பறிவில்லாத பாமரரும் விளங்கிக் கொள்ளும் வண்ணம், சுவாமிகள் உரை நிகழ்த்துவது. அவருக்கே உரித்த தனி பாணியாகும். மற்றய மத வழிபாட்டினரும், சுவாமிகள் எந்த குறிக்கோளில் எந்த விஷயத்தைப்பற்றி உரையாற்றினாலும் ஹா! வென்று வாயைப்பிளந்து கொண்டு

கேட்டு விட்டு ''சபாஷ்'' என்று தன்னையும் மீறி கத்துவதை யான் பல தடவைக் கேட்டேன்.

இத்தகைய மாபெரும் மேதை நமது காந்தியடிகளுக்கு ஒப்பான மனதுடையவர். அவர்களிடத்தில் நான் பாடங்கேட்டு சீடனானேன் என்றால் அது நான் செய்த தவப் பயனல்ல! எனது முன்னோர்கள் செய்த தவப் பயனேயன்றி வேறில்லை! வேலூர் வைத்தியம் கலாஸ் தாதவாத்தியார் பரம்பரையில் உதித்த அடியேனுக்கு வைத்தியதொடர்பு விட்டு விட்டது! காரணம் தந்தை இராமகிருஷ்ண முதலியார் 6 மாத குழந்தையாய் இருக்கும்போதே காலமாகி விட்டார். எனக்கு மருத்துவம் எப்படி வரும்?

எனவே நடமாடும் பல்கலைக் கழகம் நமது வாரியார் சுவாமிகள் ஏற்றி வைத்த விளக்கு எங்கள் குடும்பம். அதை மறக்க இயலுமா?

அதுமட்டுமா? 12 ஆண்டுகளாக உங்கள் கைகளிலே தவழ்ந்து விளையாடுகிறதே! மூலிகைமணி அது யார் கைபட்டு வந்தது? 1964-ம் வருடம் அக்டோபர் மாதம் வேலூர் சண்முகனடியார் சங்கத்திலே கந்தர் சஷ்டி விழாவிலே ''மூலிகை மன்னர்'' என்ற பட்டம் கொடுத்து மூலிகை மணியை வெளியிட்டார்.

அதன் முதல் பிரதியை வாங்கினவர் யார் தெரியுமா? வேலூர் நகர பிரமுகரும் சுவாமிகளின் அன்பைப் பெற்றவரும் பிரபல ரொட்டி வியாபாரியுமான திரு. A. S. அருணாசலம் பிள்ளை அவர்கள். மகா தர்மவான். அவர் பல குடும்பங்களுக்கு விளக்கேற்றி வைத்தவர், இறுதி காலம் அவர் அமரராகி கங்கை கரையில் தங்கி விட்டார். சுவாமிகளுடன் சேர்ந்து அவரும் எனது குடும்பத்துக்கு விளக்கேற்றிய ஒருவர். அவர் முதல் வாங்கிய பிரதியால் தான் மூலிகைமணி இன்று வரை தங்கு தடையின்றி வெளியாகிறது.

சுவாமிகள் உரை நிகழ்த்துவதே ஓர் அலாதி! (1) பாமர படிப்பறிவு இல்லாத மக்கட் கூட்டத்தில், (2) கல்லூரி மாணவர்களிடையே, (3) இலக்கிய மன்றங்களிலே, (4) இறைபணி மன்றங்களிலே, (5) தனியார் வாழ்த்துரை மேடைகளிலே, (6) புராண

இதிகாச பிரசங்கங்களிலே உரையை கேட்டு அனுபவித்தவர்களுக்குத் தான் தெரியும். அவர்களையும் அறியாமல் எழும்பும் சிரிப்பொலிகள் கூட்டமதிரும்! ஒரு சமயம் வேலூர் வூரீசு கல்லூரியிலே உரை நிகழ்த்தினர்! ஆரம்பத்தில் மாணவர்கள் நையாண்டி கேலி செய்தவர்கள் உரையின் நடுவே வரும் கருத்துக்களைக் கேட்ட பின்னர் இளிச்ச வாயர்களாகி விட்டனர். முடிவில் வாழ்த்தொலிகள் வானைப் பிளந்தன! இத்தகைய கவர்ச்சியுடைய உத்தமர் ஸ்ரீ தேவர் எடுத்ததிரைப் படத்திலும் காட்சி தந்து மக்கள் அறியாமையை— போக்க உரை நிகழ்த்தினர்! (நடிப்பல்ல!) சுவாமிகள் திருக்கோயில் புனருத்ராண பணிக்கு தாம் உரை நிகழ்த்துகையிலேயே நிறைய வசூல் செய்து விடுவார். ஈச்சமர இலை போன்ற உள்ளங்களும் லோபகுணம் படைத்தவர்களும் இவர் பேச்சை கேட்டு தாராளமாக திருப்பணி களுக்கு அள்ளிக்கொடுப்பதை யான் பலதடவை கண்டு இருக்கிறேன்.

சுவாமிகளுக்கு எத்தனையோ சீடர்கள் ஒரு துறையிலல்ல! சிலர் பிரசங்கிகள், சிலர் பாடகர்கள், சிலர் கொல்லத்து மேஸ்திரிகள், சிலர் மர வியாபாரிகள், இதுபோல் எத்தனையோ தொழில் செய்பவர்கள்.

இந்த மூலிகை மருத்துவத்திலும் அவர் பெரியப்பா ஒருவர் இருந்தார். அவரிடம் சில விஷயங்களைத் தெரிந்து கொண்டவர். அடியேனை சீடனாக்கிக் கொண்டு அவ்விஷயங்களை எனக்கு உபதேசித்து ஒரு மாத இதழையும் ஆரம்பித்துக் கொடுத்த அவரை எனது எதிர்கால பரம்பரை யாளரும் மறக்கக் கூடாது அல்லவா?

எல்லாம் வல்ல எந்தை முருகவேல் தணிகை வள்ளலை எனது குரு சுவாமிகள் தானே காட்டிக் கொடுத்தார்! எனவே தமிழ் சமுதாயம் தலைதூக்கி உலக மேடையில் நிமிர்ந்து நிற்க வும், தமிழ் கடவுள் முருகனின் திருவருள் சக்தி எங்கும் நிறைந்து நிற்கவும், எனது சுவாமிகளுக்கு இன்னும் நீடிய ஆயுளைத் தந்து நாடு உய்ய-நாம் அனைவரும் மனோவாக்கு காயத்தால் இந்த பவழ நல் விழா நேரத்திலே தணிகை நாதனை வேண்டுதல் செய்வோமாக!




# 199-வது மூலிகை

## அகில்

சமுதாயத்தில் சந்தனக் கட்டைக்கு அடுத்தபடியாக அகில் கட்டைக்கு மதிப்புண்டு. இதனுடைய பயனையும் முறையையும் தெரிந்து வைத்து இருக்க முடியாது. ஒவ்வொரு குடும்பத்திலும் இதன் பயனை தெரிந்து வைத்தால் அவசர காலத்துக்கு அதிக பணச் செலவில்லாமல், வரும் நோய்களைக் குணப்படுத்திக் கொள்ளலாம்.

அகில் என்பது சந்தனம் போன்ற மர வகுப்பைப் போன்றது. பெரும் காடுகளில் சந்தன மரத்தோடு வளரக் கூடிய குறிப்பாக இது வட நாட்டில் இமயமலை அடிவாரத்திலும் பீஹார் காடுகளிலுல் தென்னிந்தியாவில் சிற்சில அடர்ந்த காடுகளில் வளரக் கூடியதாகும். காடுகளில் இதைக் கான முடியாவிட்டாலும் நாட்டு மருந்து கடைகளில் விற்பனை செய்வார்கள். இந்த அகில் கட்டையைச் சுவைத்தால் கைப்பும் அற்ப இனிப்பும் உடை யதாயிருக்கும்.

இதன் பொதுக் குணம் யாதெனில் உடலில் வெப்பமுண்டாக்கும். கல்லீரலில் வேலை செய்து பித்த நீரைப் பெருக்கும். வீக்கம் கரைக்கும் சக்தி கொண்டது. அகில் கட்டை தான் மருத்துவப் பயனாகிறது என்ப தனை நினைவு கூற வேண்டும். மற்றய இலை, பூ, வேர், காய், யாவும் மருத்துவத்தில் பயனாவதல்லை. இதனைப் பற்றிய குறிப்புகளும் பண்டைய கால சுவடிகளில் காணக் கிடைக்கவில்லை.

அகில் கட்டையினால் மண்டையிடி ஒற்றை தலைவலி, சில வகை, காய்ச்சல், வாதம், நமைப்பு படை, பீனிசம், வாந்தி, வாய் அருசி, அயர்வு ஆகியவைகள் நீங்குவதுடன் கிழவர்களின் தளர்ந்த உடலை உறுதி படுத்தும் என வாகடங்கள் கூறுகின்றன

" நாசியடைப்பு நவிரலிடி தாளு — நோய்
வீசு நமைப்புடைகள் விட்டேகும்- பேசில்
சகமயங்கந்துணை மூலையாய்! நல்ல
அகரு மரத்தாலறி "

"தளர்ந்த விருத்தருக்காந்தக்க மணத்தால்
உளைந்த சுரமனைத்து மோடும்— வளந்திகழு
மானே! அகிற்புகைக்கு வாந்தியரோகம் போம்
தானே தளர்ச்சியுறும் சாற்று. (அ. கு. வாகடம்)

## பித்த காய்ச்சலுக்கு

அகிற் கட்டையை துண்டுகளாக நறுக்கி மண் சட்டியில் 30 கிராம் போட்டு 300 மில்லி தண்ணீர் விட்டு நன்கு கொதிக்கக் காய்ச்சி பாதியாக சுண்ட வைத்து இறக்கி வடிகட்டி ஆற வைத்தபின்னர் காலை, மாலை இரு வேளையாக குடித்துவர — உஷ்ண சம்பந்தமான— பித்த சம்பந்தமான காய்ச்சல்கள் குணப்பட்டு போகும்.

## அகில் கட்டை புகை

அகில் கட்டை கொளுத்தி அதில் எரியாமல் புகை வரும்படிசெய்து அந்த புகையை உள்ளுக்கு இழுத்தால், அதனால் கல்லீரல் கோளாறுகள் நீங்கி பலப்படும். , வாந்தி, அரோசகம், அழற்சி நீங்கி விடும்! இந்த புகை ரணங்களின் மேல் பட்டால் அவை ஆறிவிடும். இந்த மாதிரியான நம் நாட்டு மூலிகைக்கு போட்டியாக அன்னிய தாவரம் ஒன்று வந்துள்ளது, அது எது தெரியுமா? பத்தாண்டுகளாக தமிழ் நாட்டில் வந்து புகுந்து ஏராளமாக வளரும். அந்த தாவரம் பெயர் தான் வேலிக்காத்தான், சீமை வேலிமுள், வேலிக் கருவை என்ற பெயரால் வழங்கி வருகிறது. இதன் புகை மனிதர் மேல் பட்டால் சிவந்த மேனியும் கருப்பாகி விடும்! கண்களில் பட்டால் கண்ஒளி மங்கி போகும். உள்ளுக்கு சுவாசித்தால் நுரையீரல் பழுதாகும். புகை புண் மேல் பட்டால் அந்த ரணம் பெரிதாகி புரையோடி அவயவங்களை, எடுக்க நேரிடுகிறது. இது பொய்யல்ல. அனுபவ உண்மை. அதுமட்டுமல்ல இந்த வேலிக்காத்தான் பிராண வாயுவை மனிதர் போல உண்டு பயங்கரமான கரியமில வாயுவை வெளிவிட்டு நாட்டு மக்களை நோயாளியாக்குகிறது. அகில் நல்லது செய்து காட்டில் இருக்கிறது. வேலிக்காத்தான் எல்லா விதத்திலும் தீமையே புரிகிறது. ஆனல் இது காட்டில் இல்லை. நகரத்தின் நடுவே இருந்து வளர்கிறது இது நம் நாட்டிற்கு வந்த நாளாகவே இதன் தீமையை கூறி வருகிறேன். ஆனல் பொது மக்களில் சிலர் விறகுக்காகுமே என்று நோயை வளர்த்து இதனையும் வளர்த்து வருகிருர்கள். அரசாங்கத்திற்கு பல தடவை எடுத்து சொல்லியும் அந்த அரசுக்கும் காதில் விழவில்லை. இது நம் நாடு செய்த துர்பாக்கியம். வேலிக்காத்தானை விட்டு அகில் கட்டையை கவனிப்போம்.

## கிழவர்களின் உடல் இறுகிக் கட்ட

அகில் கட்டையை பசும்பால் விட்டு சந்தனம் அரைப்பது போல அரைத்து அதை உடம்பில் பூசிக்கொள்ள உடல் தளர்ந்து சதையெல்லாம் தொள தொளவென்று ஆடும் தொண்டு கிழவர்களின் தசைநார்கள் கெட்

டிப்படும் உடல் மேனியாகும் என்பதில் ஐயமில்லை. வேண்டுமானால் சோதனை செய்து பாருங்கள்.

## அகில் கட்டை தைலம்

முறை விபரம்: அகிற் கட்டையை சிறு துண்டுகளாக நறுக்கி 300 கிராம் 2 லிட்டர் நீரில் போட்டுக் காய்ச்சி 1 லிட்டர் ஆக சுண்டிய குடிநீர் பசும்பால் 1 லிட்டர் நல்லெண்ணை 1 லிட்டர் ஆக மூன்றும் கூட்டி ஒன்ருக்கி அடுப்பேற்றி காய்ந்து கொண்டு இருக்கும்போது சாறு சுண்டும் சமயம் 30 கிராம் அதிமதுரம் 30 கிராம் தான்றிக்காய் தோலும், தூள் செய்து போட்டு பதமாக காய்ச்சி வடிகட்டி கொள்க. இது ஸ்னன தைலம் வாரம் 1 முறை எண்ணெஸ்னனம் எடுத்துவர மண்டை பீனிசம், ஒற்றைத் தலைவலி, மண்டையிடி, கழுத்துக்கு மேல் காணும் (E. N. T.) வியாதிகள் அனைத்திற்கும் சிறந்தது. அத்துடன் நுரையீரல் நோய்களான ஆஸ்துமா மூச்சு திணரல் போன்ற வியாதிகளுக்கும் சிறப்பான தைலம். இதையே முடி வளரும் தைலமாகவும் தினமும் தடவி வரலாம்.

அகில் கட்டை தூள் பல தாதுவிர்த்தி லேகியங்களுக்கும் சித்த மருத்துவர்கள் பயன் படுத்துவது நமது தமிழகத்தின் வழக்கமாகும். இவ்வளவு சிறப்பு கொண்ட அகிற் கட்டையின் பயனை இனியாவது செய்து நல்ல பலனை அனுபவியுங்கள். ⊙

உ

## பொதுமக்களுக்கு முக்கிய அறிவிப்பு

---

# மூலிகைமணி தயாரிப்புகளான,

**மூலிகை ஸ்நானப் பொடி**

விலை [150 கிராம்] ரூ 2 00

**மூலிகை மணி பல்பொடி**

விலை - [50 கிராம்] ரூ. 1 00

**அவுரி கூந்தல் தைலம்**

விலை - [100 M. L.] ரூ. 7 00

(உள்ளூர் வரிகள் தனி)

ஆகிய மூன்றினையும் பொது விற்பனைக்குக் கிடைக்க ஏற்பாடு செய்துள்ளோம் எனவே, வாசக அன்பர்கள் இம்மூன்று பொருள்களையும், மூலிகைமணி விற்பனையாளர்களிடம் கேட்டு வாங்கிப் பயனடையலாம்.

சென்னையில்,

**மூலிகைமணி ப்ராடக்ட்ஸ்**

3, திருமலைப்பிள்ளை ரோடு,
தி. நகர். சென்னை-17.
(வாணி மகால் அருகில்)

என்ற முகவரியில் நேரடியாகப் பெறலாம்.

தமிழகமெங்கும் விற்பனையாளர் தேவை
(தக்க கமிஷன் உண்டு)

## வாசகர்கட்கு அரிய வாய்ப்பு

[1] மூலிகைகளை அறிதல்.

[2] கற்கம், சூரணம், மாத்திரை, பற்பம், செந்தூரம், லேகியம், தைலம், ஆகியன செய்தல்.

[3] நோய் கணித்தல்.

[4] நாடிப் பார்த்தல்.

[5] 35 வகையான முக்கிய நோய்களை பற்றி விளக்கமாக அறிதல், எனனும் 5 வகையில் அடங்கும்

---

## மூலிகைமருத்துவவகுப்புகள்

வருகின்ற டிசம்பர் மாதம் சென்னையில 'மூலிகை மணி' சார்பில் நடத்த திட்டமிடப்பட்டுள்ளது. 10 நாட்கள் நடக்கும் இவ்வகுப்புகளில் கலந்து கொள்வதன் மூலம், மூலிகை மருத்துவ அறிவை செயல் முறைப்படுத்தி நேரடி அனுபவம் பெறலாம். எழுதப் படிக்கத் தெரிந்து, மூலிகை மருத்துவத்தில் ஆர்வமுள்ள அனைவரும் இவ்வகுப்புகளில் பங்கேற்கலாம். மூலிகை மணி சந்தா அன்பர்கட்கு மட்டுமே முன்னுரிமையளிக்கப்படும். மேலும் விபரமறிய, ரு 1க்கு அஞ்சல் தலை கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பிப் பெறலாம்.

மூலிகைமணி

7, அருளாம்பாள் தெரு,

தி. நகர். சென்னை-600017.

# சங்க இலக்கியத்தில் மருந்துச் செடிகள்

க. வேங்கடேசன், எம். ஏ., சென்னைப் பல்கலைக் கழகம்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

மனிதன் தோன்றிய நாள் முதல் இன்றுவரை உலக அரங்கில், மனிதனுக்கு வரும் நோய்களைத் தீர்க்கும் உயிர் நண்பனாய்; உடல் நலக் காப்பாளனாய், விளங்கி வருகின்றன — மருத்துவத் தாவரங்கள்.

உலகெங்கும் நிலவி வரும் இத்தகைய மருத்துவத் தாவரங்கள் பற்றிய குறிப்புகள் அவ்வந்நாட்டு பழங்குடி மக்கள் வரலாறு, நாட்டுப் பாடல்கள், வரலாற்று நூல்கள், இலக்கியங்கள், அகழ்வாராய்ச்சிகளின் வாயிலாக வெளியிடப் படுகின்றன. கி. மு. நான்காம் நூற்றாண்டில் வாழ்ந்ததாகக் கருதப்படும் கிரேக்க அறிஞன் ஹிப்போகிரேடிஸ் 'மருத்துவத்தின் தந்தை' எனக் குறிப்பிடுகிறார். அவ்வறிஞர் எழுதிய நூல்களில் மருத்துவத் தாவரங்கள் பலவற்றின் பயன் முறைகள் கூறப் பட்டுள்ளன. (Hippocrates, who is recognized as the 'Father of Medicine' and who lived about 4th century before Christ recorded in his writings the use of herbs in the treatment of disease.

— J. Hewlettl — Parsons, "Herbs, Healing, Thorsons Publisers Ltd.' London, P - 10.) அதே காலத்தில் தமிழகத்தில் வாழ்ந்ததாகக் கருதப்படும் தொல்காப்பியர், தனது நூலான தொல்காப்பியத்தில் வேம்பு, கடுகு ஆகிய இரு தாவரங்களின் மருந்துத் தன்மையைப் புலப் படுத்தியுள்ளார்.

(வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
தாங்குதல் இன்றி வழிநனி மயக்குமென்'
தொல்காப்பியம் செய்யுளில் நூற்பா : 424)

கி. மு. 77 ஆம் ஆண்டில் ரோம் நாட்டில் வாழ்ந்த 'டயஸ் கோர்ட்டிஸ்' என்பவர் 'தி மெட்டீரியா மெடிக்கா' என்னும் (De-materia Medica) புத்தகத்தில் மருந்துகளின் பண்புகளையும், அவற்றைத் தரும் மருந்துத் தாவரங்களைப் பற்றியும் விரிவாக எழுதியுள்ளார். கி. பி. 3 ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட இலக்கியமான புறநானூற்றில் 'கரு நெல்லி' போன்றத் தாவரங்கள் சாவா மருந்தாகப் பயன்பட்ட செய்திகள் கிடைக்கின்றன சங்க இலக்கியத்தில் கூறப்பட்டிருக்கும் நூற்றுக்கு மேற்பட்டத் தாவரங்கள் பிற்காலத்தில் மருந்துக்குப் பயன்பட்டச் செய்திகளைச் சித்தர் நூல்கள் வழி அறியலாம். 'போகர்' எனும் சித்தர் மருந்தாகப் பயன்பட்ட 473

மூலிகைகளைத் தம் நூலில் தொகுத்து கூறியுள்ளார். (போகர் கருக்கிடை நிகண்டு) மருந்துக்குதவும் தாவரங்களை உலகுக்கு அறிவித்த பழமையான இனங்களில் திராவிட இனமும் ஒன்று எனலாம். பச்சிலை மருந்தால் நோய் பலவற்றை வியக்கத்தக்க முறையில் மாற்றி வரும் இனம் திராவிட இனம் என்று கருதுகின்றார் டாக்டர்வி. ஐ, சுப்ரமணியம். (சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்' பக். 16.) பண்டைய தமிழ் மருத்துவர்கள் மருந்தாகப் பயன்படுத்திய தாவரங்களைப் பற்றியும்-மருந்து முறைகளையும் தொகுத்துப் 'பதார்த்தகுண சிந்தாமணி' ('பதார்த்த குண சிந்தாமணி' 1973 ) 'குணபாடம்' [குணபாடம் 1931] எனும் நூல்களாக வெளியிட்டுள்ளனர். தற்காலத்தில் மருந்தளிக்கும் தாவரங்களைப் பற்றி அறியவும், ஆராயவும் தனித் துறைகளே உள்ளன. இவற்றிற்கு பார்மகாக்னசி [Pharma Cognosy] என்று பெயர். இங்ஙனம் உலக அரங்கில் மருத்துவத் தாவரங்கள் எல்லாக் காலங்களினும், இன்றியமையாத சிறப்பினம் பெற்று வருவதுடன், அறிவியல் யுகமான இக்காலத்திலும் மருந்தாய்வாளர்கட்கு அரிய மருந்துகளைத் தரும் 'அட்சய பாத்திரமாக' விளங்குகிறது எனலாம்.

மருத்துவத் தாவரங்களைப் பற்றிய நீண்ட இப் பின்னணியினைப் புரிந்து கொண்டால் தான் சங்க இலக்கிய மருத்துவத் தாவரங்களின் பெருமையை உணர முடியும். உலகுக்கு அறிவிக்க முடியும்.

### சங்க இலக்கியத்தில் மருத்துவத் தாவரங்கள்

சங்க இலக்கியமும் காலமும்: தமிழில் கிடைத்துள்ள பழந்தமிழ் நூல்களைச் 'சங்க இலாகியம்' என்று அழைப்பர். தொல்காப்பியம் எனும் இலக்கண நூலே தமிழில் கிடைத்துள்ள தொன்மையான இலக்கண நூலாகும் இதன் காலத்தைக் கி. மு. 4ஆம் நூற்றாண்டு என்று கணிப்பர் அறிஞர் மா. இராசமாணிக்கனார்.

> 'வேறு தக்க சான்றுகள் கிடைக்கும் வரையில், தொல்காப்பியர்,
> கி. மு. 4.ம் நூற்றுண்டினர் என்று கருதுதல் தகும்.'

''கால ஆராய்ச்சி' 1913] அதன் பின் தோன்றிய இலக்கிய நூல்களை சங்க இலக்கியம் என்பர். சங்க காலத்தைக் கி. பி. 300 வரை, வரையுறை செய்வர். தொல்காப்பியத்திற்கு அடுத்து எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இரு பெரும் தொகுப்பில் அடங்குபவை சங்க இலக்கியம்.

| பத்துப்பாட்டு நூல்கள் | எட்டுத்தொகை நூல்கள் |
|---|---|
| 1. திருமுருகாற்றுப்படை | 1. நற்றிணை |
| 2. பொருநராற்றுப்படை | 2. குறுந்தொகை |
| 3. சிறுபாணாற்றுப்படை | 3. ஐங்குறு நூறு |
| 4. பெரும்பாணாற்றுப்படை | 4. பதிற்றுப் பத்து |
| 5. முல்லைப்பாட்டு | 5. பரிபாடல் |
| 6. மதுரைக்காஞ்சி | 6. கலித்தொகை |
| 7. நெடுநல்வாடை | 7. அகநானூறு |
| 8. குறிஞ்சிப்பாட்டு | 8. புறநானூறு |
| 9. பட்டினப்பாலை | |
| 10. மலைபடு கடாம் | |

ஆகிய சங்க இலக்கியம் எனப்படும். தொன்மையான நூல்களான சங்க இலக்கியங்கள் தோன்றிய காலத்தை இன்னும் திட்டமாகக் கணிக்க வில்லை எனினும், சங்க காலம் என்பது கி. பி. 300 வரை உள்ள காலம் என்றும் அறிஞர் கருதுவர். [தென்னிந்திய வரலாறு-2 பக். 16] அக் கால அளவில் தோன்றியதாகக் கருதப்படும் மேற் கண்ட இலக்கிய நூல் களைப் பத்துப் பாட்டு, எட்டுத் தொகை எனும் இரு பகுப்பில் தொகுத் தனர்.

சங்க இலக்கியத்தில் தாவரங்கள் :—

தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய சங்க நூல்களில் நூற்றுக்கு மேற்பட்ட தாவரங்களைப் பற்றிய செய்திகள் சங்கப் புலவர்களால் இலக்கிய நயப் தோன்றப் புலப்படுத்தப்பட்டுள்ளன. பெரும்பான்மையான தாவரங்கள் வருணனைகளுக்காகவும், உவமை களுக்காகவும் பயன்படுத்தப்பட்டிருந்த போதிலும் அவைகளிலிருந்து அக்கால மக்கள் பயன்படுத்திய உணவுத் தாவரங்கள், மருந்துத் தாவரங் கள், கனிகள் ஆகியவற்றைப் பற்றியும் அறிய முடிகிறது. இவைகள், இன்றைய மருத்துவ ஆய்வாளர்களி, வரலாற்று ஆசிரியர்கள், தாவர இயலார் ஆகியோருக்குப் பெரிதும் உதவுகின்றன. பல்வேறு செடி கொடிகள் எவ்வாறெல்லரம் மனித வாழ்விற்கு வளம் சேர்த்தன என் பதனைத் தமிழ் மருத்துவக் கண்கொண்டு பார்ப்பார்க்குப் புலப்படும். வரலாற்று ஆசிரியர்கட்கு டாக்டர் வி. ஐ. சுப்ரமணியம் அவர்கள் கருது வது போல் திராவிடர்கள் மத்திய தரைக்கடலிலிருந்து வந்தனரா? அல் லது தென்னகத்தவரா? என்று தெளிய சங்க இலக்கியத் தாவரங்கள் நேரடியாக உதவா விட்டாலும் தமிழ் இலக்கியம் தோன்றியது தென்ன கத்தில் தான் ['சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்' பக். 16]

என்று உறுதியாகக் கூற ஓரளவு உதவுகின்றன. தாவர இயலார்க்கு செடி கொடிகளை இனம் காணவும், ஐயத்திற்குரிய தாவரங்களைப் பற்றித் தெளிவான சான்றுகள் பெறவும் இவை உதவுகின்றன. அனைத்திற்கும் மேலாகத் தமிழ் இலக்கியம் பயில்வோர்க்கு இன்பம் தரும் வகையில் இயற்கையின் நுட்பமான அருமை பெருமைகளை உணரப் பெரிதும் உதவுகின்றன. சங்க காலத் தமிழ் மக்கள் இயற்கையின் இனிய பின்னணியில் செம்மையான வாழ்வை நடத்தியவர்கள் எனும் கருத்தினை உருவாக்குவதற்கு தாவரங்களைப் பற்றிய செய்திகளே இன்றியமையாத இனிய சான்றுகளாகத் திகழ்கின்றன.

சங்க இலக்கியத் தாவரங்கள் — பல்வகை ஆய்வு :—

சங்க இலக்கியத் தாவரங்களைச் நுணுகி ஆய்வு செய்யும்போது முதலில் தோன்றும் கருத்து, தாவரங்களைச் சங்கப் புலவர்கள் போற்றும் சிறப்பேயாகும். நிலப்பாகுபாடு, காதல் ஒழுக்கங்கள், போர் ஆகியவற்றைக் குறிக்கும் சின்னங்களாகக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, வெட்சி, கரந்தை, உழிஞை, நொச்சி, காஞ்சி ஆகிய தாவரங்களின் பெயர்களையே பயன்படுத்தியுள்ளமை கருதத் தக்கது. [It is a well-known fact that the names Kurinci, Mullai, Palai, Ulinai, and Nocci are very popular names in literature indicating some of the trees as well as the different aspects of love and war. Especially the first five of these indicate in Tamil literature the well-known five aspects of love and the five regions of land appropriate to them. "The Treatment of Nature in Sangam Literature" 1968] தலைவன் பிரிவு காரணமாக வாடிய தலைவியின் மேனி நிறத்தைப் புலப்படுத்த விரும்பிய புலவன் அம்மேனி நிறத்தைப் பீர்க்கம் பூவின் நிறத்தோடு ஒப்புமைப் படுத்திக் காட்டுகின்றான்.

"நுண்கொடிப் பீரத்தின் ஊழுறு பூவெனப்
பசலை ஊரும் மன்னோ"

நற்றிணை நானூறு 1967] இங்ஙனம் அக வாழ்விலும் புறவாழ்விலும் சங்க காலத் தமிழர்கள் தாவரங்களைப் பயன்படுத்தியமை — அதன் காரணங்கள், சிறப்பு ஆகியவற்றை டாக்டர் மு. வ. அவர்களும் சேவியர் தனிநாயக அடிகளாரும் தங்கள் நூல்களில் விரிவாக ஆய்ந்துள்ளனர். இனி, மிகச் சிறப்பாக, சங்கப் புலவர்களின் பெயர்களை உற்று நோக்கின் பலருடைய பெயர்களுக்கும், தாவரங்களுடைய பெயர்களுக்குமிடையே தொடர்புடையதை உணரலாம்.

(தொடரும்)

# நோயும் - மருந்தும்

வினா: எனக்கு வயது 26. என் கணவருக்கு வயது 32. இருவருக்கும் திருமணமாகி 6 வருடங்களாகின்றது. குழந்தையில்லை. இந்தக் கவலையுடன் உடல் பிணி வருத்தம் வேறு எங்களை வேதனையில் ஆழ்த்துகிறது. குறைந்த ஊதியம் பெறும் எங்களுக்கு மாதா மாதம் 20, 30 என்று மருத்துவச் செலவு ஆகிறது. என் கணவர் திருமணம் செய்யும்போது மெலிந்திருந்தார். இப்பொழுது உடல் தடித்துள்ளது. அதோடு நெஞ்சுவலி வந்து மூச்சுவிட முடியாமல் திணருதல், வெந்நீர் ஒத்தடம் கொடுத்தால் சிறிது குணம். ஏதாவது புண் பட்டால் பெரிய ரணமாகி விடுகிறது உடல் அரிப்பு. மர்ம குறியிலும் வலி ஏற்படுகிறதாம். விரை வாதம் வேறு இருக்கிறது: ஒரு கடினமான வேலை செய்ய முடியவில்லை: இதற்கெல்லாம் ஒருவழி சொல்வீர்களென்ற நம்பிக்கையுடன் இதை எழுதுகிறேன். எனக்கு அடிவயிற்றில் பிரட்டல் உண்டாகி வாந்தி வருவது போன்ற உணர்ச்சி, மாதவிடாய் சமயத்தில் தாங்க முடியாத வயிற்றுவலி. தங்களை நேரில் கண்டு சுகம் பெறலாமென்ற ஆவல் இருந்தும் நாங்கள் வெகு தொலைவில் இருக்கிறோம். பொருளாதாரம் இடந்தரவில்லை. அன்பு கூர்ந்து தாங்கள் ஏதாவது நோய் தீர ஓர் வழி கூறுங்களேன்.

விடை: சகோதரி! உமது கடிதக் குறிப்பு உன் கணவருக்கு சிக்கலான நோய் வாத சம்பந்தப்பட்டுள்ளது. அத்துடன் மேக சம்பந்தமும் இருப்பதால் அரிப்பும் உள்ளது. இந்த நோயை நேரில் கண்டால் பூரண சுகம் பெறும் வழிவகைகளைக் கூறலாம். ஆனால் வெகு தொலைவிலிருப்பதால் என்ன செய்வது? ஒன்று செய்யுங்கள். மேக நோய் தீர முறையில் எமது ''மகா மூலிகை எண்ணெயை'' பத்தியமுடன் ஒரு முறை சாப்பிடுங்கள். அதன் பிறகு 2 கழற்சி பருப்பை பாலில் அரைத்து பாலில் 1 முறை உள்ளுக்கு தரவும். இதனால் உடல் தடிப்பும் அரிப்பும் குறையும். பிறகு கீழாநெல்லியும் மஞ்சள் கரிசாலையும் சமமாக அரைத்து எலுமிச்சம் பழ அளவு காலை மட்டும் சாப்பிட்டு பால் குடிக்கச் சொல்லவும். 40 நாளைக்கு செய்ய உடல் தூய்மையாகும். உங்களுக்கு தினம் முருங்கைக் கீரையை இடித்த சாறு 2 அவுன்ஸ் எடுத்து 2 சிட்டிகை ரொட்டி சோடாவும் சேர்த்து காலையில் மட்டும் 40 நாள் குடிக்கவும். மாதவிடாய் வயிற்றுத் தொல்லை யாவும் நீங்கி குழந்தை பேறு உண்டாகும். முருகன் திருவருளை

நினைந்து காரியங்களைச் செய்து கவலையை மறந்து வாழ்க்கை நடத்திவர எல்லாம் நல்லவையாகவே நடக்கும் ஆசி.

வினா: எனக்கு வயது 32. திருமணமானவன். ஒரு நாள் மதியம் சோற்றுக் கற்றாழையை மட்டும் தேய்த்து தலை முழுகினேன். மறுநாள் இடது காது மந்தமாகவும் தாடை வீக்கம் லேசாக வலியும் சுரமும் கண்டன. M B.B.S. டாக்டரிடம் சென்றேன்' விதை வீக்கத்திற்கு ஊசி போட்டு, காதுக்கு மருந்து எழுதிக் கொடுத்தார். 1 வாரம் தொடர்ந்து செய்ததில் குணம் கிடைக்கவில்லை. பின்பு D.M.O. கவனித்து Hydrosel என்று சொல்ல ஆபரேஷன் செய்ய வேண்டுமென்றார். விதையில் லேசாகத் தான் வீக்கமிருந்தன அதிகமில்லை. நான் ஆபரேஷனுக்கு பயந்து ஊசி மட்டும் போட்டுக் கொண்டேன். வீக்கம் சிறிதளவு கரைந்தது. ENT டாக்டரிடம் காதை காண்பித்தேன். அவர் மருந்து எழுதிக் கொடுத்தார். ஆனால் காதையும் ஆபரேஷன் செய்ய வேண்டுமென்று தான் சொன்னார். நான் மறுத்து விட்டு Ear Drops மருந்து மட்டும் 1 மாதம் ஊற்றி வந்தேன். குணம் கிடைக்கவில்லை. மீண்டும் கேட்டேன் மூக்கில் சிறு அடைப்பு உள்ளது ஆபரேஷன் செய்ய வேணுமென்றார்! இதற்கும் பயந்து போனேன். ஆபரேஷன் செய்து கொள்ள மறுத்து விட்டேன். இந்த நவீன மருத்துவர்களிடம் போனாலேயே கத்தி எடுக்கிறேன் என்றாலே எனக்கு பயமாக உள்ளது. இதற்கு என்ன செய்யலாம். தயவு செய்து கூறுங்களேன்.

விடை: ஐயா திருமணமாகாதவரே! உனது நோயும் சிகிச்சையும் சிரிப்பாக வருகிறது. இவ்வளவு பெரிய பெரிய டாக்டரை நேரில் அணுகி பரிசோதனை செய்து கொண்ட உமக்கு ஒரு தமிழ் மருத்துவரை நேரில் பார்க்க மனமில்லையே! எம்மிடமும் ஒரு கடிதம் தானே எழுதினீர்கள். காது, மூக்கு, தொண்டை, மண்டையில் சீதளம் நீர் கொண்டவர்களுக்கு இயற்கையாகவே அங்கு நீர்கட்டும் சளியூறும் சவ்வுகள் வீங்கும். இதற்கு ஆபரேஷன் தேவையில்லை, ஆனால் குளிர்ச்சியான பண்டங்கள், குளிர்ச்சியான நீர், குளிர்ந்த காலம் இவைகளில் தாக்காமல் உடம்பை பாதுகாப்பதுடன் எண்ணை முழுக்கு செய்யாமல் இருப்பது நல்லது. தமிழ் மருந்துகளான முத்து பற்பம், பவள பற்பம், சண்டமாருதம், கஸ்தூரி, கோரோசனம், சிவனார் அமிர்தம் போன்ற பற்ப செந்தூரங்களை தகுந்த மூலிகை சூரணங்களில் கலந்து தேனில் சாப்பிட அடியோடு நோய்கள் ஒழியும். முடிந்தால நேரில் ஆலோசனை பெறலாம்.

வினு: நான் மனிதனுகபிறந்ததை விட,மரம் செடி கொடியாக பிறந்திருந்தால் பல நோயாளிகளுக்கும் பயனுகியிருப்பேன். நான் என்ன தவறு செய்து விட்டேன் என்று கேட்கிறீர்களா? எனக்கு வயது 19. S.S.L.C. நல்ல மார்குடன் 1974-ல் பாஸ் செய்தேன். பரீட்சை சமயம் ஒரு கயவனின் நட்பினுல் நான் எனது சக்தியை பாழ்படுத்திக் கொண்டேன். பாலுணர்ச்சியால் தூண்டப் பட்டேன். இதற்கு முன் சினிமா பார்ப்பது எனக்கு பிடிக்காது! ஆனுல் இந்த கெட்ட பழக்கமேற்பட்ட பிறகு அடிக்கடி சினிமா பார்ப்பதும் குறிப்பாக காதல் காட்சிகள் ஆபாச புத்தகங்களை படிப்பதும் இரவு கண் விழிப்பதும் பலமுறை சக்தியை வீணடிப்பதிலும் காலங்கழித்தேன். நான் சேலம் மாவட்ட நூலகத்தில் ஓர் உறுப்பினன் ஒரு சமயம் தங்கள் மூலிகைமணி இதழ்கள் (1975) இறுதியில் இருந்ததைக் கண்டு பிடித்தேன். அதை அனைத்தையும் எடுத்துப் படித்தேன் [அங்கு 1970 வரையில் தான் புத்தகங்கள் இருந்தன] திருந்தினேன். ஆனுல் இரவு நேரங்களில் சக்தி வெளியாகிறது. தற்போது சினிமா மற்ற ஆபாச நூல்கள் பக்கம் திரும்பி பார்ப்பதில்லை. ஆனுல் இப்போது முடி உதிர்கிறது. அதிக வளர்ச்சி இல்லை. சிலசமயம் தொப்புளைச் சுற்றி ஊசி குத்துவது போன்றும் உள்ளது. நான் சோப்பு வாசனை திரவியங்கள் உபயோகிப்பதில்லை. வசதி குறைவான குடும்பம். நான் S.S.L.C. முடித்தவுடன் [கிணற்று வேலை] கிணற்றில் இறங்கி கம்பி அடித்து வேட்டு வைத்தல் செய்து வருகிறேன். என் அப்பாவுக்கு ஐம்பது வயது. குடும்ப சாப்பாட்டுக்கு வழி செய்து விட்டு மீதம் பிடித்து சிறிது நிலம் வாங்கினேன். நிலம் வாங்கவில்லையெனில் நான் மீண்டும் கல்லூரி சென்று அப்பணத்தை அழித்திருப்பேன் என்று என் மனம் உறுத்துகிறது. பணம் கிடைக்கும்போது இதழ் [மூலிகை மணி] வாங்குவேன். நான் முதலில் நாத்திகனுக இருந்தேன். இப்போது தினம் காலையில் குளித்துவிட்டு விபூதி அணிந்து பின்புதான் சாப்பிடுவேன். அடிபணிந்து நான் தங்களை கேட்பதென்னவென்ருல் நான் செய்த தவறுகளுக்கு பரிகாரமும் எனது உயிர் சக்தி வெளியாகதிருக்கவும், முடி உதிர்வதை தடுக்கவும் சிறந்த மூலிகைகளைத் தெரிவிக்கவும்.

விடை : தம்பி! பிறர் பேச்சை கேட்டுக் கெட்டு விட்டேனென்று எழுதினாய்! அல்ல! நீ திருந்தி விட்டாய். ஆமாம் உனது உள்ளுணர்வு சிந்திக்க வைத்ததை அறிந்தாய். ஒவ்வொருவருக்கும் மனசாட்சி என்று ஒன்று உண்டு. அது நன்மை தீமையை உணர்த்திவிடும். அது தான் உள்ளுணர்வு என்பது. சிலர் மனசாட்சியை கொன்று விடுகின்றனர். எனவே நல்லது கெட்டது அறியாது இருளில் மூழ்கி விடுகின்றனர். பிறகு வாழ்வே இருளடைந்து விடும். ஆனால் உனது கடிதம் கெட்ட பழக்கத்திலிருந்து விடுபட்டு விட்டாய். எப்பொழுது திரைப்படம் பார்க்க வெறுத்து ஆபாச கதைகளை படிப்பதை நிறுத்தினாயோ— உனது வாழ்க்கை மறு மலர்ச்சியடைந்து விட்டது. கடுமையாக உழைத்து முன்னுக்குவர முயற்சி செய். உத்தமமான வாழ்க்கை நடத்த எழுந்தவுடன் குளித்து முகத்தில் விபூதி பூசுவதை மறக்காதே. அத்துடன் சண்முக கவசம் பாராயணம் செய்வதை தினமும் பழக்கப்படுத்திக் கொள். அலையும் மனம் அமைதி பெறும். உடல் நலம் பெற, சக்தி வீணாவது தடுக்க தினமும் தூதுவளை, முருங்கை கீரை, அரைக்கீரை, முசுமுசுக்கை, இவைகளில் ஒன்றை தவறாமல் நெய்யுடன் உண்டு வர பழகு. பெரியோரின் துணை கொள். அன்னை தந்தைக்கு அடிபணிந்து அவர்களுடைய ஆசியையும் அன்பையும் பெற்றால் அதுவே உனக்கு வாழ்க்கை பயணத்திற்கு மேடு பள்ளமற்ற சிமெண்ட் பாதை போன்றதாகும். எல்லா வற்றிற்கும் மேலாக முருக பக்தனாக பழகு. வேலுண்டுவினையில்லை. மயிலுண்டுபயமில்லை. நல்ஆசிகள்.

## கார்த்திகை முதல்

மூலிகைமணி மலர் 12-வது ஆண்டு முடிவடையப் போகிற இத் தருணத்தில் சந்தா வாசக அன்பர்களுக்கு'ஓர்' வேண்டுகோள். கடந்த பனிரண்டு ஆண்டுகளாக மூலிகைமணி இதழ் 50 காசு. ஆகவே பொது மக்களுக்கு விற்பனை செய்து வந்தது ஓர் அதிசயம்! அற்புதம்! உலகத்திலே இவ்வளவு நீண்ட நாட்களாக விலையேற்றாமல் பொதுப்பணியில் ஈடுபட்டு சேவை செய்த மாத சஞ்சிகை எதுவுமே இல்லை என திடமாகக் கூறி விடலாம். இனியும் இம் மாதிரி செய்ய இயலாது. எனவே 13-வது ஆண்டு முதல் மூலிகை மணி விலையில் ஒரு சிறிதளவு மாற்றம்! அதாவது 75 பைசாவாக தனிப்பிரதியும் சந்தா 9-00 ரூபாயாக்கி விட்டது! இது குறித்து சந்தா வாசக அன்பர்கள் லட்சியம் செய்ய மாட்டார்களென்றே கருதுகிறோம். 12 ஆண்டு காலமாக தொடர்ந்து வாசித்து நற் பயனடைந்தவர்கள் மேலும் தொடர்ந்து ''மூலிகைமணி' சேவை செய்ய எல்லாம் வல்ல இறைவனை வேண்டி பிரார்த்தனை செய்து கொள்வார்களாக கார்த்திகை மலர் 1-00 ஆக எங்கும் கிடைக்கும்
இனி ஆண்டு சந்தா 9-00 தனிப்பிரதி 0—75 காசு.

ஆசிரியர்

# மரபு வழி நோய்கள்

## (Hereditary Diseases)

திரு கொ. ப. செல்லப்பன்,
தாவரவியல் விரிவுரையாளர்,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்

மனித இனம் தோன்று தொட்டுப் பல நோய்களால் துன்புற்று வருகிறது. காலப் போக்கில் நோய்களின் எண்ணிக்கையும் வகைகளும் பெருகிக் கொண்டே வருகின்றன. இதே போன்று விலங்குகளும் தாவரங்களும் பல நோய்களால் துன்புறுகின்றன.

நம்மிடையே காணப்படும் நோய்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

1. ஊட்ட உணவு மற்றும் உயிர்ச்சத்துப் பற்றுக்குறை நோய்கள்
(Nutritional and Vitamin deficiency diseases)

2. பாக்டீரியா, வைரஸ் போன்ற தீங்கிருமிகளால் உண்டாகும் நோய்கள்
(Bacterial and Viral diseases)

3. மரபுவழி நோய்கள்
(Hereditary diseases)

இவற்றில் முதலிரண்டு வகை நோய்களை மருத்துவவியல் ஆய்வின் பயனாகத் தக்க நோய்த்தடுப்பு மருந்துகளைக் கொண்டும் அறுவைசிகிச்சை செய்தும் மருத்துவர்கள் குணப்படுத்தி வருகின்றனர். ஆனால் மூன்றாவது வகையான மரபுவழி நோய்களைப் பற்றி, அண்மைக் காலம்வரை அறிவியலாராலும் மருத்துவர்களாலும் அறிவியல் வழியாகத் தெரிந்து கொள்ள முடியாமல் இருந்து வந்தது. ஆனால் இவ்வகை நோய்கள் பண்டைக் காலந்தொட்டு நம்மிடையே இருந்திருக்கின்றன என்பது பல வரலாற்று ஏடுகளின் வழியாக நாம் அறியலாம்.

மரபுவழி நோய்களின் மூலக்காரணிகள், அவற்றின் தன்மைகள் பற்றிய விவரங்கள் மரபியல் (Genetics) தோன்றிய 1900 ஆம் ஆண்டு முதல் நமக்குக் கிடைக்கப் பெற்று வருகின்றன மரபியல் அண்மைக் காலத்தே தோன்றியதாயினும் அது பெற்றிருக்கும் இன்றைய வளர்ச்சி வேறு எந்த அறிவியல் துறையும் பெறவில்லை.

மரபுவழி நோய்களில் எண்ணிக்கை, அவைகளின் தன்மைகள், அவை தோன்றக் காரணங்கள் போன்ற செய்திகளை நமக்கு விளக்கிக் கூறும் இன்றைய அறிவியல் அந்நோய்களை நிரந்தரமாகக் குணப்படுத்தும் முறைகளை இதுவரை கண்டறிய முடியாமலுள்ளது. மரபு வழி நோய்கள் ஒரு தலைமுறையில் தோன்றி, வழிவழியாக அத் தலைமுறையின் சந்ததிகளிடத்துக் காணப்பட்டு வருகின்றன. இந்நோய்களுக்கான மூலகாரணிகள் நமது உடலிலுள்ள ஒவ்வொரு செல்லிலும் (Cell) இருக்கும் உட்கருவினுள் (Nucleus) உள்ள குரோமோசோம்கள் (Chromo somes) என்ற வண்ண இழைகளினுள் பொதிந்திருக்கும் ஜீன்கள் (Genes) எனப்படும் மரபு மூலங்களேயாகும். ஒரு மனிதனின் பல்வேறு உறுப்புகளின் அமைப்புகளும் ஏன் அவனுடைய பல பண்புகளும் பழக்கவழக்கங்களும் மரபு மூலங்களினால் தான் நிர்ணயிக்கப்படுகின்றன. ஒரு குழந்தை அதன் பெற்றோர்களின் அங்க அமைப்புகளையும் மற்றும் பல பண்புகளையும் பெற்றிருக்கக் காரணம் அது தன் பெற்றோர்களின் மரபு மூலங்களின் பிரதிபலிப்புகளைக் கொண்டிருப்பதாலாகும். பெற்றோர்களிடையே (தாயிடமோ அல்லது தந்தையிடமோ) நோய்களுக்குரிய மரபு மூலங்கள் இருப்பின், பால் இனப்பெருக்கத்தின்போது காமீட்டுகள் (Gametes) வழியாகக் கருவிற்கு அம் மரபு மூலங்கள் எடுத்துச் செல்லப்பட்டு அப் பெற்றோருக்குப் பிறக்கும் குழந்தைகளிடத்தும் அத்தகைய நோய்கள் காணப்படுகின்றன. மரபுவழி நோய்கள், மரபியல் கோட்பாடுகளின் அடிப்படையில் வழிவழியாகப் பல தலைமுறைகளுக்கு எடுத்துச் செல்லப் படுகின்றன.

இன்றைய மரபியல் வல்லுநர்களும். மருத்துவர்களும், மரபுவழி நோய்களை ஆராய்ந்து அவற்றிற்குக் காரணமாக மரபு மூலங்களின் தன்மையை அறிந்து, மரபுவழி நோய்கள் ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்கு எந்த விதங்களில் எடுத்துச் செல்லப்படுகின்றன போன்ற விவரங்களை நமக்குத் தந்துள்ளனர். ஆனால் இவ்வகை நோய்களுக்கான நிரந்தர தடுப்பு முறைகளை அறிவியலால் இன்றுவரை வெற்றிகரமாகக் கண்டறியப் படவில்லை. சில மரபு மூலங்களில் உண்டாகும் திடீர் வேதியியல் மாற்றங்களினால் அவைகளினால் அவைகளின் இயல்பான தன்மை மாற்றம் அடைந்து மரபு வழி நோய்கள் உண்டாகக் காரணமாகின்றன. ஒரு முறை மரபு மூலங்கள் திடீர் மாற்றம் அடைந்தால் மாற்றமடைந்த நிலையிலேயே நிரந்தரமாகப் பல தலைமுறைகளுக்கு அவை செல்கின்றன. மாற்றமடைந்த மரபு மூலங்களை அவற்றின் பழைய நிலைக்கு மாற்றினாலன்றி அவை உண்டாக்கும் குறை நோய்களை குணப்படுத்த இயலாது. ஆனால் திட்டமிட்டவாறு குறிப்பிட்ட மரபு மூலங்களைக் குறிப்பிட்ட எந்தவொரு முறையினாலும் மாற்றமடையச் செய்ய அறிவியல் துறையால் இதுவரை முடியவில்லை.

1. வண்ணக்குருட்டு நோய் (Colour blind disease)

இயல்பான கண் பார்வை உடையவர்களால் ஒளிக்கற்றையினுள்ள சுமார் 165 வகை வண்ணங்களை எளிதில் நிற வேறு படுத்தியறிய முடியும். ஆனல் வண்ணக் குருட்டு நோயுடையவர்களால் குறிப்பிட்ட சில நிறங்களை வேறுபடுத்தி அறிய முடியாது. சிவப்பு, மஞ்சள், ஊதா, பச்சை ஆகிய நான்கு அடிப்படை வண்ணங்களில் ஏதேனும் ஒன்றை வேறுபடுத்தி அறியவோ அல்லது அவை எல்லாவற்றையும் கண்டறியவோ இயலாது. மற்றபடி எல்லோரையும் போல் இவர்கள் இயல்பான கண் பார்வை கொண்டவர்களாகவேயிருப்பார்கள். வண்ணக் குருட்டு நோய்களான மரபு மூலக்காரணி, பாலமைந்த குரோமோசோம் களில் (Sex Chromosomes) உள்ளது. பெரும்பாலும் இந்நோய் ஆண் களிடமே காணப்படும். பெண்கள் வெகு அரிதாகவே இந்நோய்க்காளா வார்கள். ஆணின் உட்கருவில் XY என்ற குரோமோசோம்களும் பெண் ணின் உட்கருவில் XX என்ற குரோமோசோம்களும் இருக்கின்றன. இக் குரோமோசோம்களே ஆண், பெண் பால்களை உறுதிப்படுத்துகின்றன. வண்ணக்குருட்டு நோயின் காரணியான மரபு மூலம் ஆணின் X குரோமோசோமில் இருப்பின் அந்நோய் அவனுடைய மகள் வழியாகப் பிறக்கும் ஆண் குழந்தைகளிடத்து சரிவிதத்தில் தோன்றும். வண்ணக் குருட்டு நோய் ''டால்டோனுசம்'' (Daltonism) என்ற பெயரால் வழக்கி லிருந்தது. ஏனெனில் 1794-ஆம் ஆண்டு டால்டன் என்ற வேதியியல் அறிஞர் இந்நோய்க்கு ஆளானர். இவர் தான் முதன் முதலில் இந் நோயைப் பற்றி ஆராய்ந்தார்.

2. இரத்தக்கசிவு நோய் (Hemophilia diseases) இந்நோய் பல ஆண்டுகளாக ஐரோப்பா நாட்டின் அரசபரம்பரைக் குடும்பங்களில் பரவலாகக் காணப்பட்டதாக வரலாறு கூறுகிறது. இந்நோயுடையவர்களுக்கு ஒரு சிறு காயம் ஏற்பட்டாலும், குழாய்கள் உடைந்து இரத்தப்பெருக்கு ஏற்பட்டு, விரைவில் உடலிலுள்ள இரத்தம் முழுவதும் வெளியேறி மரணம் உண்டாகும். சாதாரணமாக, ஒருவருக்கு ஏதேனும் காயம் ஏற் பட்டு இரத்தம் வெளிப்படுமேயாயின், விரைவில் இரத்தம் உறைந்து மேலும் இரத்தச் சேதம் அடையாவண்ணம் இயற்கையாகக் காக்கப்படு கிறது. ஆனல் இரத்தக் கசிவு நோயுடையவர்களுக்கு இயற்கையான இரத்த உறைவு ஏற்படுவதில்லை. இந்நோய், வண்ணக்குருட்டு நோயைப் போல் ஆண்களிடத்து மட்டும் காணப்படும். இது மரபு வழியாக ஒரு தலைமுறையிலிருந்து மற்றொரு தலைமுறைக்கு வருவதாகும். இதற்கான காரணி X குரோமோசோமில் உள்ளது. இரத்த கசிவுநோய் கண்டவர்கள் குழந்தைப் பருவத்திலேயே பொதுவாக இறந்து போவார்

கள். ஒரு சிலரே விபத்துக்கள் ஏதும் ஏற்படாமல் பாதுகாக்கப்பட்டு வயது வந்த பின்பு திருமணமும் செய்து கொள்கிருர்கள் அவ்வாறு திருமணம் செய்து கொண்டால் அவர்களுடைய ஆண் சந்ததிகளில் உறுதியாக இரத்தக் கசிவு நோய் காணப்படும்

3. வளர்சிதை மாற்றக் குறை நோய்கள் (Disease due to metabolic disorder)

நமது உடலில் பல வளர்சிதை மாற்றங்கள் (metabolisms) நடைபெறுகின்றன. சிலருக்கு இவ்வகை வளர்சிதை மாற்றங்களில் உண்டாகும் சில தடைகளால் பல குறை நோய்கள் உண்டாகின்றன. வளர்சிதை மாற்றங்கள் மரபு மூலங்களினுல் இயங்கப்படுகின்றன அம்மரபு மூலங்களின் இயல்பான தன்மை மாற்றமடைந்தால், அவைகளால் இயங்கப்பெறும் வளர்சிதை மாற்றங்களில் தடைகள் ஏற்படுகின்றன. இத்தடைகளால் இயல்பாக உண்டாகும் வேதி மாற்றங்கள் உண்டாவதில்லை. இதனுல் சில உடல் நலக்குறைவுகள் சிலருக்கு ஏற்படுகின்றன எடுத்துக் காட்டாக, பினைல் அலனின் (Phenylalanine) மற்றும் டைரோசின் (Tyrosin) வளர்சிதை மாற்றங்களில், அவைகளை இயக்கும் மரபு மூலங்களின் புறம்பட்ட செயல்களினுல் சில வேதிமாற்றத் தடைகள் ஏற்பட்டு அல்காப்டனூரியா (Alcaptonuria) என்ற நோய் உண்டாகிறது இந்நோய் கண்டவர்களின் சிறுநீர், உடலிலிருந்து வெளியேறியவுடன் கருப்பு நிறமாக மாறும். மேலும் அவர்களின் காது, மூக்கு, மணிக்கட்டு போன்ற குருத்தெலும்புகளுள்ள உறுப்புகளின் இயல்பான நிறம் மாறும் இந்நோய்க்கு முக்கிய காரணம் 'அல்காப்டன்' (Alcapton) அல்லது ஹோமோஜென்டிசிக் அமிலம் (Homogentisic acid) என்ற வேதிப்பொருளாகும். சாதாரணமாக நமது ஈரலில் உள்ள ஹோமோஜென்டிசேட் ஆக்சிடேஸ் (Homogentisate oxidase) என்ற நொதி (enzyme) ஹோமோஜென்டிசிக் அமிலத்தை நிறமற்றப் பொருளாக மாற்றிக் கடைசியில் அது கரியமிலவாயுவாகவும், நீராகவும் பிரிக்கப்பட்டுச் சிறுநீராக (urin) வெளியேற்றப்படுகிறது. ஆனுல் அல்காப்டனூரியா நோயுடையவர்களுக்கு மேற்சொன்ன நொதி சுரக்கப் படாததால் ஹோமோஜென்டிசிக் அமிலம் மாற்றமடையாமல் சிறுநீருடன் வெளியாகிக் காற்றுப் பட்டவுடன் கருப்பு நிறமாக மாறுகிறது.

இதே போன்று, பினைல் அலெனின் வளர்சிதை மாற்றத்தில் ஏற்படும் மற்ருெரு தடையால் ''பினைல்கீட்டோனூரியா'' (Phenylketonuria) என்ற ஒரு நோய் உண்டாகிறது இந்நோயுடையவர்கள் சில மன நோய்களுக்காளாகிருர்கள். இவர்களின் தோலில் இயல்பான நிறத்திற்குக் காரணமான நிறமிகள் (Pigments) உண்டாவது இந்நோயால் நேரிடையாகப் பாதிக்கப்படுவதால் இவர்களின் தோல நிறமிகளற்று வெளிர் நிறமாக இருக்கும். மேலே கூறிய இவ்விரு வளர்சிதை மாற்றக் குறை நோய்களும் மரபு வழி சார்ந்தவைகளாகும்.

4 எரித்ரோ பிளேஸ்டோசிஸ் ஃபீடாலிஸ் (Erythroblartosis foetalis):

இது சோகை எனப்படும் இரத்தத் தொடர்பான நோய்களுள் ஒன்றாகும். இது அண்மையில் பிறந்த பச்சிளங் குழந்தைகளிடத்துச் சில சமயங்களில் காணப்படும் இந்நோயுடைய குழந்தை பெரும்பாலும் தாயின் கருப்பையிலேயே இறந்து பிறக்கும். அல்லது பிறந்த சில நாட்களில் இறந்து விடும். இந்நோய்க்கான காரணத்தைச் சுருக்கமாக இங்கே பார்ப்போம். மனித இரத்தம் நிறத்தில் செந்நிறமுடையதாயினும் உண்மையில் பல பாரம்பரிய வேறுபாடுகளைக் கொண்டதாகும். பாரம்பரிய வேறுபாட்டின் அடிப்படையில் நமது இரத்தம் பல வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவற்றுள் Rh (ரீசஸ் - rheus) வகை என்பது ஒன்று. இவ்வகையில் Rh- நேர்நிலை (Rh+), Rh- எதிர்மறை (Rh-) என்ற இரண்டு வகுப்புகள் உள்ளன. இவ்விரண்டும் ரீசஸ்காரணியால் உண்டானவை. Rh- நேர்நிலை இரத்தம் என்ற ஓங்கியல்பு (dominant) மரபு மூலத்தாலும் Rh- எதிர்மறை இரத்தம் Rh- என்ற ஒடுங்கியல்பு (recessive) மரபு மூலத்தாலும் உண்டாக்கப்படுபவை. மேற்கூறிய இரத்தச் சோகை நோயுடைய குழந்தை (Rh- நேர்நிலை (Rh+) இரத்தத்தைப் பெரும்பாலும் உடையதாய் இருக்கும். இது Rh- தாய்க்கும் Rh+ தந்தைக்கும் பிறக்கும் 'குழந்தையாகும். இந்த Rh+ குழந்தை Rh- தாயின் கருப்பையில் வளரும் காலத்தில் நஞ்சுக்கொடி (Placenta) வழியாக இதன் R+ இரத்தம் தாயின் Rh+ இரத்தத்துடன் கலப்புறப் பெறுகிறது இச்சமயத்தில் குழந்தையின் Rh+ இரத்தம் தாயின் Rh- இரத்தத்தில் எதிர் -Rh எதிர்ப்பொருள்களைத் (anti- Rh anti bodies) தோற்றுவிக்கிறது. இவ்வாறு இடைவிடாத தாய்-சேய் இரத்த ஓட்டத்தில் சிறிது சிறிதாக இவ்வெதிர்ப் பொருட்கள் தாயின் இரத்தத்தில் சேர்ந்து உச்ச நிலை அடைந்து மீண்டும் சேயின் இரத்தத்துடன் கலந்து அதில் காணும் பல்லாயிரக்கணக்கான சிவப்பணுக்களைத் தாக்குகின்றன. இத்தகைய எதிர்ச் செயலின்போது சிவப்பணுக்கள் அழியுற்று இரத்த சோகை உண்டாவது தூண்டப்படுகிறது. இதனால் குழந்தை கருப்பையிலேயே இறந்துபிறக்கவோ அல்லது பிறந்தவுடன் இறக்கவோ நேரிடுகிறது. சில பெண்களுக்கு எப்பொழுதும் குறைப் பிரசவம் ஏற்படுவதற்கு இதுவொரு முக்கியக் காரணமாகும். இந்நோய் ஒரு தாய்க்குப் பிறக்கும் முதல் குழந்தையை அவ்வளவாகப் பாதிப்பதில்லை. அடுத்துப் பிறக்கும் குழந்தைகளிடத்தே இது அதிகமாகக் காணப்படும். இதற்குக் காரணம், முதன் முதலில் கருவுற்ற காலத்தில், தாயின் இரத்தத்தில் எதிர்ப்பொருட்கள் அதிக அளவில் உற்பத்தி ஆகாததேயாகும். ஆகவே Rh- பெண்ணும் Rh+ ஆணும் திருமணம் செய்து கொண்டால் அவர்களின் குழந்தைகள் பெரும்பாலும் இரத்தச் சோகை நோயால் இறக்க நேரிடும். ஆதலால் இத்தகைய திருமணம் விரும்பதக்கதல்ல. ⊙

# தமிழ்த் திருமணம்

[ கி. இராமலிங்கனுர் எம்.ஏ., ]

## செய்முறையும் - விளக்கமும்

(சென்ற இதழின் தொடர்ச்சி)

### III மந்திரங்கள்

இத்திருமணத்தில், ஓதும் மந்திரங்கள் அனைத்தும், தமிழ்த் தெய்வப்பனுவல்களிலுள்ள அருட்பாடல்களில் சூழ்நிலைக்கு ஏற்றனவாக இருக்குமாறு தேர்ந்தெடுக்கப் பெற்றனவே.

"நிறை மொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறை மொழி தானே மந்திரம் என்ப' என்று தொல்காப்பியம்

மந்திரத்திற்கு இலக்கணம் வகுக்கிறது. மந்திரம் எந்த மொழியிலும் இருக்கலாம்; தமிழிலும் உண்டு. தொல்காப்பியர் காலத்துக்கு முன்பும் மந்திரமாகப் போற்றத்தக்க தமிழ் இருந்தது என்னும் உண்மையை, 'என்ப' என்னும் சொல்லால். தொல்காப்பியர் மேற்கண்ட நூற்பாலில் குறித்திருக்கிருர்.

### IV பலரும் பங்குகொள்ள வாய்ப்பளிப்பது

தமிழ்த் திருமணம் உற்ருர், உறவினர், அன்பர் நண்பர் அனை வரும் அதில் பங்கு கொள்ளுமாறு அமைந்திருப்பதை அறியலாம். ஒருவர் வாழ்வில் திருமணம் என்பது மிகச் சிறந்ததொரு மகிழ்ச்சியான நிகழ்ச்சி. இதில் எல்லோரும் என்னென்ன வகையிலோ கலந்து கொண்டு சிறப்பித்து மகிழ்ச்சிப் பெருகச் செய்வது இன்றியமையாததே. இதற்குப் பிற மணமுறைகளில் இல்லாத வாய்ப்புகள் இதில் இருக்கின்றதை, மண நிகழ்ச்சிகளைக் கண்டு களிக்கும்போதே காணலாம்.

தொழில் புரிவோர் பலருக்கும் இம் மணப் பொருள்களில் பங்கு உண்டு. குயவர் மணத்திற்குரிய குடங்கள் முதலியவற்றைச் செய்து அளிக்கிருர். அவருக்கே தெரியும் என்னென்ன பாண்டங்கள் மணத் திற்குத் தேவையானவை என்று. கிளை விளக்கு முதலியவற்றிற்கு அவ் வப்போது எண்ணெய் விட்டுச் சரிவர எரியச் செய்து வருபவரும் வண் ணுர். அரிசி வாழ்த்தின்போது. அடியில் துணி விரிப்பவர் அவரே. அந்த அரிசி அவருக்கு உரியது.

மணப் பொங்கல் அவருக்கும் குயவருக்கும் சேரும். காப்புக் கட்டும் போது தட்டில் இருக்கும் அரிசி தேங்காய் முதலியன அம்பட்டருக்கு உரியன.

மங்கலத்தாலி செய்து தரும் தட்டாருக்கும் சில மரியாதைகள் உண்டு.

இவ்வாருகத் தமிழ்த்திருமணம் சமுகத்திலும் குடும்பத்திலும் உள்ள அனைவரும் கலந்து கொள்ளும் ஒரு சமூக நிகழ்ச்சியாகவும் அமைந்திருப்பதை அறியலாம்.

## V இன்றும் நிலவித் தமிழ் மரபு காப்பது

இத்திருமண முறை. எக்காலத்தில் நாட்டில் ஏற்பட்டது என்று திட்டமாகக் கூறுவதற்கில்லை. தொல்காப்பியர் காலத்திலேயே, பொய்யும் வழுவும் நுழைந்த பிறகு, கணவன் மனைவியருக்குள்ள ஒன்றிய தன்மையை நிலை நிறுத்தும் பொருட்டு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது சிலப்பதிகாரத்தில் வரும் கோவலன் கண்ணகித் திருமணத்திலேயே சில சடங்குகள் நுழைந்து விட்டதைக் காணலாம்.

மண அறையைச் சோலை போல அமைத்துக் கொள்வது, மணமக்கள் அங்குக் கூடியே திருமணம் செய்து கொள்ள உறுதி கொள்வது மணப்பந்தரில் அம்மியோடு குழவியையும் வைப்பது மணமகனை மணமகளிடம் ஒப்படை செய்வது இவையும் பிறவும் தமிழ் மரபை ஏற்றுக்கொள்ள விரும்பாதவர்கள் வீட்டுத் திருமணங்களில் இல்லாதிருப்பதை இன்றும் பார்க்கலாம் நிறைகுடம், குடவிளக்கு, முளைப்பாலிகை இவையின்றி கூடத்தில் மணமக்களை உட்கார வைத்து மணங்கள் நடப்பதைக் கண்டபோது, ஏன் இவையும் மண அறையும் பிறவும் இல்லையேயென அந்த மணங்களைச் செய்து வைத்த ஆசிரியர்களைக் கேட்டதில், அவையெல்லாம் எதற்கு? என்னும் விடையே வந்தது. அத்தகைய ஒரு மணத்தல் கருங்கல் துண்டு ஒன்று மட்டுமே இடம் பெற்றிருந்தது. ஆசிரியரை 'அம்மியும் குழவியும் வேண்டாமா' என்று வினவியதில், அவை எதற்கு, அகலிகையை மணமக்களுக்கு நினைவூட்டவும், சப்தபதிக்குப் பயன் படவும் இக்கருங்கல் துண்டே போதுமே என்று அந்த ஆசிரியர் விடை பகர்ந்தார்.

(தொடரும்)

# பொருள்களின்
# குண விளக்கம்

[சென்ற மாதத் தொடர்ச்சி]

## கலப்பு நெய்க்குணம்

நெய்யுட் பலநெய்க்கு நீள்சுக்கி லம்பெருகும்
வெய்யபசி யுண்டாம் விடும்பித்த-மெய்யனலா
லுள்ளபித்த வெக்கைபோ மோங்குமிருந் தானிலைக்குங்
கொள்ளத் தெரியுங் குணம்.

(இ-ள்.) எருமை நெய் முதலிய கலப்புநெய்யால் சுக்கிலப்பெருகும் தீபனமும் உண்டாம். பித்ததோஷமும் தேகக் கொந்தளிப்பாலாகிய பித்தமும்போம் உயிரைத் தாங்குகின்ற உடலும் பலக்கு மென்க.

## பன்றி-உடும்பு-காக்கை இவைகளின் நெய்க்குணம்

பன்றிநெய் நீர்க்கடுப்பு பாயுமூலத் திரத்தங்
கன்றியா வாதக் கடுப்புமுதற்-றுன்றியநோய்
போக்கு முடும்பின்னெய் போமிரத்தம் போக்கிவிடுங்
காக்கைநெய் காமாலைக்காங் காண்.

(இ-ள்.) பன்றி நெய்யானது மூத்திரக்கடுத்தலையும் ரத்தமூலக்கிராணியையும் வாதக்கடுப்பு முதலிய பிணிகளையும் நீக்கும், உடும்பின் நெய் ரத்தக்கிராணியை நீக்கும், காக்கைநெய் காமாலைக்குதவும்.

## ஆமை-ஓணன்-கரடி இவைகளின் நெய்க்குணம்

ஊணமை நெய்மூல மோட்டும் ஓணனெய்க்குக்
காணப் புறவலிநோய் காணவாம்-பூணர்
முலையாய் கரடிநெய்க்கு முன்வாதம் மோடும்
புலையாருங் கால்வெடிப்பும் போம்.

(இ-ள்.) ஆபரணங்களையணிந்த தனங்களையுடைய பெண்ணே ஆமைநெய் ரத்தமூலம் நீங்கும். ஓணன் நெய்யால் பின்னிசிவுதீரும்கரடிநெய்யால் வாதவேகமும் பாதவெடிப்பும் நீங்குமென்க.

## ஆமணக்கு நெய்க்குணம்

ஆமணக்கு நெய்யா னலமுண்டா மியாவர்க்கும்
பூமணக்கு மேனி புரிகுழலே-வாய்மணக்கக்
கொள்ளில் வயிறுவிடுங் கோரமுள்ள வாயுவறு
முள்ளில்வரு குன்மம்போ மோர்.

## இதுவுமது

அம்பொனிற மும்விந்து மாங்குடலி னேற்றமறு
மைம்பொறிச் சூடெறிவு மாறுங்காண்-அம்புவியிற்
பாமணக்கு மின்பமொழிப் பாவாய் நலஞ்செறிந்த
ஆமணக்கின் நெய்யுண் டறு

(இ-ள்.) புட்பங்கள் பரிமளிக்காநின்ற அழகு பொருந்திய கட்டப் பட்டகூந்தலையும் இனிய மொழியையுமுடைய பெண்ணே! உஷ்ண திக்கமுள்ள முத்துக்கொட்டை நெய்யை முறைமைப்படிக்குக் குடித் தால் விரோசனமாம், இதனல் கோரவாதங் குன்மம் குடலேற்றம் தேகம் கண். மூக்கு செவி வாய் இவைகளிலுண்டாகிறயெரிச்சலும் நீங்கும். பொன்னிறமும் தாதுவிருத்தியுமுண்டாகும்.

## சிற்றுமணக்கு நெய்க்குணம்

மருந்தி னழலும் வளியான் மூலத்துட்
பொருந்து மழலுமறப் போக்குங்-குருத்திற்கு
நற்று யெனவளர்க்கு நாளுமழலைத் தணிக்குஞ்
சிற்று மணக்கி னெய்தான்றேர்.

(இ-ள்.) சிற்றுமணக்குநெய் பற்பல ஔஷதங்களின் வெப்பங் களையும், வாயுவினல் மூலத்திலுண்டாகின்ற உஷ்ணங்களையும் நீக் கும். சிசுக்களை தாய் வளர்ப்பது போல உடலை வளர்ப்பிக்குமென்க.

## எள்ளின் நெய்க்குணம்

புத்தி நயனக்குளிர்ச்சி பூரிப்பு மெய்ப்புகளுஞ்
சத்துவங் காந்தி தனியிளமை-மெத்தவுண்டாங்
கண்ணோய் செவிநோய் கபாலஅழல் காசநோய்
புண்ணோய் போமெண்ணெய்யாற் போற்று.

(இ-ள்.) எள்ளினது நெய்யால் புத்திக்குத் தெளிவு விழிக்குக் குளிர்ச்சி மனமகிழ்ச்சி தேகபுஷ்டி பலம் தேஜசு வாலிபத்தன்மை இவை கள் உண்டாகும். நேத்திரநோய் கர்னரோகம் கபால உஷ்ணம் காசம் விரணம் ஆகிய இவைகள் நீக்குமென்க.

## வாதுமை நெய்க்குணம்

அழலெல்லா மாற்றுமரிய வுடம்பி
லழுலோடு விந்துவை யுண்டாக்கும்-வழுவழுப்பைப்
பூண்ட கபம்போக்கும் பொறிகட் கொளிசெய்யு
நீண்ட அடப்பம்விதை நெய்

(இ-ள்) வாதுமை நெய் ஔஷதங்களினாலும் உழைப்பினாலும் கிளைத்த வெப்பங்களையும் கபதோஷத்தையும் நீக்கும். சமோஷ்ணஞ் சுக்கிலம் பஞ்சேந்திரிகளுக் கொளிவு இவைகளை உண்டாக்குமென்க.

## வேப்பநெய்க் குணம்

வாதம்போம் பித்தமிகு மாருக் கிரந்தியொடு
மேதுகரப்பான் சிரங்கு முன்னிசிவும்-ஓதுடலின்
நாப்ப ணுறுசுரமு நாடுசந்நியுந் தொலையும்
வேப்பநெய்யென் றெருகால் விள்.

(இ-ள்.) வேம்பின் நெய்க்கு மகாவாதம் கிரந்தி கரப்பான் சிரங்கு ஆகிருஷ்ண ஸ்தம்பனவாதம் சுரம் சத்திநீங்கும். பித்தமாம்.

## இலுப்பை நெய்க்குணம்

கரப்பா னடருங் கடிசிரங்கு புண்ணு
முரப்பா மிடுப்புல்லி யோடு கரப்பான்
பாகுமொழி மாதே பலமுண்டாந் துற்பலம்
பேகுமிலுப் பையிநெய்க் கே.

(இ-ள்) கற்கண்டனைய மொழிக்காரிகையே! இலுப்பை நெய் யால் கரப்பான் கடிவிஷம் சிரங்கு விரணம் வன்மை இவையுண்டாம் சகல வாதமும் துர்ப்பலமும் நீங்குமென்க.

(தொடரும்)

# 'சீ ஞக் கா ர ம்'

Dr. S. சேக்முகமது R. M. P.

[சென்ற இதழின் தொடர்ச்சி]

❀ ❀ ❀

பற்பமாகும் முறை 6 : சீனக்காரம் 100 கிராம் எடுத்து ஒரு மண் சட்டியில் போட்டு வேண்டிய அளவு நீர்விட்டு கரைத்து அதிலுள்ள துவர்ப்பு நீங்குமட்டும் முன்போல் செய்து கல்வத்தில் இட்டு தூள் செய்து கொள்ளவும்.

பயன் : திரிகடி பிரமாணம் நெய், வெண்ணெயில் கொள்ள நீர் கடுப்பு, வயிற்றுக்கடுப்பு, வாய்ப்புண், வயிற்றுப்புண் முதலியவை நிவர்த்தியாகும்.

பாஷாண மருந்துகளைச் சாப்பிட்டு வயிறு வெந்து போனால் ஒரு நாளைக்கு நான்கு அல்லது ஐந்து முறை முட்டையின் வெண்கருவில் சாப்பிட மருந்தின் வேகத்தை குறைத்து புண்களை ஆற்றும்.

பற்பமாக்கும் முறை 7 : தேவையான சீனக்காரத்திற்கு மேலும் கீழும் போதுமான கடல் நுரையை வைத்து மருந்துக்த தக்க படி புடமிட கட்டும். ஒரு மண் சட்டியை அடுப்பில் ஏற்றி கட்டிய சீனக்காரத்தை தண்ணீரில் கரைத்து, சிறுக சிறுக அடுப்பில் ஏற்றிய சட்டியில் ஊற்றி எரிக்க பஸ்பமாகும்.

பயன் : பணவிடை ஆவின்பால் அல்லது வெண்ணெயிற் கொள்ள வெட்டை நீங்கும். முலைப்பாலில் கரைத்து கண்ணில் விட கண் படல வியாதியும், கண்ணின் சதை வளர்ச்சியும் நீங்கும்.

பற்பமாக்கும் முறை 8 : 3 பலம் சீனக்காரத்தை வேண்டிய அளவு பசும்பாலிட்டு இரண்டு சாமம் அறைத்து வில்லை தட்டிக் காயவைத்து 20 எருவில் புடமிட பஸ்பமாகும்.

பயன் : அரைக்கால் படி பசும்பாலில் வியாதியின் நிதானமறிந்து விராகனிடைக் கொடுக்க வெட்டை நீரெரிவு நீங்கும். எலுமிச்சம் பழச் சாற்றில் விராகனிடை சாப்பிட பிரமேகம் இருபதும் நிவர்த்தியாகும். மோர் சாதம் சாப்பிடவும்.

பற்பமாக்கும் முறை 9 : ஒரு கட்டியாக சீனக்காரத்தை எடுத்துக் கொண்டு, முழுவதும் நன்கு வேண்டிய அளவு பிரம்ம தண்டின் பாலைத் தடவி உலர்த்தவும். இப்படி நன்ருகப் பலமுறைச் செய்து உலர்த்தி பிரம்ம தண்டின் வேரை தண்ணீர் விட்டு நன்ருக அரைத்து, சீனக்காரத்திற்கு கவசம் செய்து காயவைத்து 10 எருவில் புடமிட சுண்ணமாகும்.

பயன் : அகத்தி இலைச்சார் அல்லது குப்பைமேனிச் சாற்றில் கொடுக்க சர்வ நோய்களும் நிவர்த்தியாகும். இச்சாபத்தியம்.

பற்பமாக்கும் முறை 10: சீனக்காரம் ஒன்றை பலம் 5 வசலை இலையை மேற்படி சீனக்காரத்துடன் சேர்த்து அரைத்து வில்லை தட்டி காயவைத்து 5 சீலைமண் செய்து முப்பது வராட்டியில் புடமிட பற்பமாகும்

பயன்: அனுபானங்களில் கொடுக்க வெள்ளை, வெட்டை, நீர்க் கடுப்பு நிவர்த்தி ஆகும்.

பற்பமாக்கும் முறை 11: ஒரு பலம் சீனக்காரத்தையெடுத்து அகத்திப் பழுப்பையரைத்து கவசம் செய்து கனமாக சீலைமண் செய்து பத்து வராட்டியில் புடமிட பற்பமாகும்.

பயன்: குன்றிமணியளவு நெய் அல்லது தேன் அல்லது பாலில் கொள்ள சூடு, கணமாந்தம், புண், சொரி, விரணங்கள் யாவும் தீரும். இச்சாபத்தியம் இருக்க வேண்டும்.

பற்பமாக்கும் முறை 12: சீனக்காரம், வெண்காரம், அன்னபேதி ஆகிய மருந்துகளை சுத்தி செய்து சம அளவு ஒரு மண் குடுவையில் எடுத்து கொண்டு கற்றாழை சாற்றை மூழ்குமளவு ஊற்றி நிழலில் ஒரு நாள் வைத்து சிறு தீயாக எரிக்கவும். பின் நீர்ச்சத்து நீங்கிய பின் கல்வத்தி லிட்டு தூள் செய்துக் கொள்ளவும்.

பயன்: தேனல்லது நெய்யில் ஒன்று முதல் இரண்டு உளுந்தளவு கொள்ள எல்லா வகை உஷ்ண சம்பந்தப்பட்ட வியாதி நிவர்த்தியாகும்.

## செந்தூரம்

செந்தூரமாக்கும் முறை 1: சீனக்காரத்தை பொரித்து ஒரு பலம் எடுத்துக் கொண்டு அதன் நிறைக்கு நான்கில் ஒரு பங்கு இலிங்கம் சேர்த்து எலுமிச்சம் பழச்சாற்றில் நன்ருக அரைத்து பின் வில்லை தட்டிக் காய வைத்து உலர்த்தி சீலைமண் செய்து பதது எருவில் புடமிட்டவும். இப்படி மொத்தம் 5 புடமிடவும். உயர்ந்த செந்தூரமாகும்.

பயன்: 3 முதல் 5 குன்றிமணி அளவு நெய் அல்லது வெண்ணை யில் கொள்ள சீதபேதி, இரத்தபேதி, ஊழி பெரும்பாடு முதலியவை நிவர்த்தியாகும்.

செந்தூரமாக்கும் முறை 2: சீனக்காரம், வெண்காரம், நவா சாரம், கந்தகம், வீரம், பூரம், இலிங்கம், வெடியுப்பு வகைக்கு 18கிராம் எடுத்துக் கொண்டு பழச்சாற்றில இரண்டு சாமம அரைத்து குழம்பு பதத் தில எடுத்து, ஒரு மண் குடுவையில இட்டு அதில் 214 கிராம் சுத்தி செய்த அயப்பொடியைப் போட்டுக் கலக்கி சீலை கனமாகச் செய்து காய வைத்து 50 வராட்டியில் புடமிடவும்.

பின் குடுவையிலிருக்கும் மருந்தை எடுத்து, எலுமிச்சம் பழச்சாற் ருல் நான்கு சாமம் அரைத்து, சிறுவில்லைகளாகத் தட்டி காயவைத்து ஒரு

மண் அகலில் பரப்பி மேல்மூடிச் சீலமண் செய்து ஐம்பது வராட்டியில் புடமிட செந்தூரமாகும்.

பயன்: அரை குன்றி முதல் ஒரு குன்றி வரை தேனில் ஏழு நாட்கள் சாப்பிட பெரும்வயிறு, சூதக சம்பந்தப்பட்டவை நிவர்த்தியாகும்.

இதர பஸ்பங்களுடன் சீனுக்கார பஸ்பம்:

சீனுக்கார பஸ்பம், சிலாசத்து பஸ்பம், பூரபஸ்பம், சரி எடை கலந்து நோயின் நிதானம் அறிந்து தேனில் ஏழுநாள் கொள்ள வெட்டை நிவர்த்தியாகும்.

சீனுக்காரம், கல்னார், சிங்கி, சிலாசத்து பஸ்பங்களை சமஅளவு கலந்து வைத்துக் கொண்டு கொள்ள உஷ்ண சம்பந்தப்பட்ட வியாதி நிவர்த்தியாகும்.

## சீனுக்காரத்தால் செய்யப்பட்ட இதர மருந்துகள்:

கண்வலி நிவர்த்தி மருந்து: சுத்தமான மழைத் தண்ணீர் அல்லது டிஸ்டில் வாட்டர் 4 லிட்டர், சீனுக்காரம் 10 கிராம் சிறிய அளவு துருசு,

மேற்படி நீரில் சீனுக்காரத்தையும் துருசையும் தூள் செய்து நன்ருகக் கலந்து சிறிய அளவு மஜிந்தா கலந்து பின் 3 அல்லது 4 முறை சுத்தமான துணியால் வடிகட்டி கண்ணில் விட கண்வலி, கண்பீளைத் தீரும்.

குன்மத்திற்கு: சீனுக்காரம், நவச்சாரம், இந்துப்பு, வெடியுப்பு, பொட்டிலுப்பு, கல்லுப்பு, கரியுப்பு சமனிடையாக எடுத்துக் கொண்டு அதன் எடைக்கு சம பங்கு கல்லுச் சுண்ணம் சேர்த்து திராவகம் இறக்கி இதில் 3 சொட்டு மருந்தை தண்ணீரில் கலந்து சாப்பிட 5 வகை குன்மம் தீரும்.

நீரெழிவு: வெண் நாவல் கொட்டையை நன்ருக கழுவி காய வைத்து உலர்த்தி இடித்து வஸ்திரகாயம் செய்து அதன் எடைக்கு சீனுக்காரத்தை சுத்தி செய்து இரண்டையும் சேர்த்து, திரிகடி பிரமாணம் நீரில் சாப்பிட நீரெழிவு பிரமேகம் தீரும்.

[முற்றும்]

****************************************

# இ த ய ஒ லி

****************************************




Dr E K. Gopalswamy, M.I.H.B.
Registered Medical No 1984
Edayar Palayam
Kuniamuthur P. O , Coimbatore-8

அன்புடையீர் வணக்கம்,

தங்கள் முயற்சியால் உண்டான நேத்திரப்பூண்டு தைலத்தை உபயோகித்தவர் மிகவும் பாராட்டுகிறார். எனக்கும் ஒன்று அனுப்பவும்.

இப்படிக்கு
கோபாலசாமி

⊙ ⊙ ⊙ ⊙ ⊙ ⊙ ⊙

S. சுகுமாரன்,
36, தெற்கு ரத வீதி
பழனி—624601, மதுரை ஜில்லா.

ஐயா,

மூலிகைமணி, வைத்தியர் திரு கண்ணப்பர் அவர்கட்கு சுகுமாரன் எழுதும் கடிதம். தாங்களின் 'மூலிகை மணி' என்ற சிறிய புத்தகத்தில் பல வைத்திய பொக்கிஷங்கள் அடங்கியுள்ளது என்பதில் ஐயமில்லை. தங்களின் புத்தகம் சிறியது என்றாலும் அதிலுள்ள மருத்துவ விஷயங்கள் விசேடம் பொருந்தியவை.

இப்படிக்கு
சுகுமார்

⊙ ⊙ ⊙ ⊙ ⊙ ⊙ ⊙

வே. நவநீதகிருஷ்ணன்.
பாப்பம்பட்டி, பழனி வட்டம்,
மதுரை மாவட்டம்.

மதிப்பிற்குரிய மருத்துவர் அவர்களே, ''நம் நாட்டு மூலிகைகள்'' என்பன குறித்து தகுந்த ஆராய்ச்சி செய்து சிறந்த மருத்துவம் வெளியிடுவது குறித்தும் பெருமாண்பிற்கும் வணக்கத்திற்கும் உரிய உலக இன்னல்களில் இருந்து விடுபடுதற்கரிய உபாயங்களை அருளும் புனித காஞ்சி காமகோடிப் பீடப் பெரியார் 'ஜயேந்திர சரசுவதி சுவாமிகள்' போன்ற ஆன்றோர்களின் கருத்துக்களையும் அறவுரைகளையும் வெளியிடுவது குறித்தும் நான் மிகவும் பெருமைப் படுகிறேன். இதுபோன்ற நந்நூல்கள் நம் நாட்டில் வந்து நல்வழி காட்டவேண்டும்.

இப்படிக்கு
நவநீதகிருஷ்ணன்

# அனுபவம் உணர்த்தும் உண்மை

V. Kolandai swamy,
Gangapuram (P. O.)
(Via) Chitode 638102

ஐயா,

தங்களின் அற்புதத் தயாரிப்பான முக்கூட்டு கற்பக மூலிகைத் தைலம்—3 புட்டிகளும் அமிர்த சஞ்சீவி லேகியம் ஒரு புட்டியும் வாங்கி உபயோகித்து வந்தேன் வியக்கதகும் முறையில் நல்ல உடல் தெம்பு உண்டாயிற்று மிக்க நன்றி.

இப்படிக்கு
குழந்தைசுவாமி

K. கணேசன் ஆசிரியர், No: 703
குண்டலப்பட்டி P. O.
(வழி) கிருஷ்ணகிரி அணை
தர்மபுரி மாவட்டம்

பேரன்பின் பெருந்தகையீர்!

வணக்கம், தங்களின் அரியத் தொண்டால் தமிழகம் மீண்டும் சித்த மருத்துவத்தின் பொலிவு பெற்று திகழ்கின்றது. தங்களின் விடா முயற்சியால் என் போன்ருேர் பல அறிய மூலிகைகளை தெரிந்துக்கொள்ள முடிகின்றது தங்களின் அனைத்து வெளியீடுகளையும் வாங்கி படித்துக் கொண்டு வருகின்றேன் 'யான் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம்' என்ற வள்ளல் பெருமானின் வாய்மொழிக்கேற்ப ஏதோ என்னால்முடிந்த அளவு எங்கள் கிராமத்தில் தங்களின் மூலிகை பயனை எடுத்து இயம்பு கின்றேன். நோய் தீர்க்க இலவசமாக மருந்தும் கொடுத்து வருகின் றேன்.

தங்களின் பிரண்டை உப்பை பலர் பாராட்டியுள்ளனர். அந்த பெருமை தங்களுக்கே சாரும். நானும் தங்கள் நல் ஆசியால் பிரண்டை வல்லாரை, நாயுருவி, மயில் மாணக்கம், நீர்முள்ளி போன்ற மூலிகை களின் உப்பை எடுத்து வைத்துள்ளேன் வாழைப்பழ பற்பமும் செய்து வைத்துள்ளேன்.

இப்படிக்கு
K. கணேசன்

---

வெளியிடுபவரும் ஆசிரியரும்; வேலூர் மருத்துவர்
ஆ இரா. கண்ணப்பர், R.M.P, 7, அருளாம்பாள் வீதி. தி. நகர்
சென்னை - 600 017. மூலிகைமணி அச்சகத்தில் அச்சிட்டவர்:
Kurup, D.M.E., சென்னை - 600 017.